**புதுவகைகள்:** நிலவரி சர்ச்சார்ஜ். ① ரூ 50/-க்கு குறைந்த நிலவரிக்கு கிடையாது. ② ரூ 50/-க்கு அதிகமான — ஆனால் ரூ 100/-க்கு உட்பட்ட நிலவரிக்கு ரூபாய்க்கு 0.4.0 வீதம் ③ அடுத்த ரூ 400/-க்கு ரூபாய்க்கு 0.8.0 வீதம் ④ அடுத்த ரூபாய் 500/-க்கு 0.12.0 அணா வீதம் ⑤ அதற்கு மேல் உள்ளவற்றுக்கு ரூ 16 அணா வீதம்; விளக்கம்: ① ஒருவர் செலுத்தும் நிலவரி ரூ 50 என்றால் சர்சார்ஜ் இல்லை. ② செலுத்தும் வரி 60 ரூபாயானால் அதிகப்படியான ரூ 10/-க்கு ரூபாய்க்கு 0.4.0 வீதம் ரூ 2.8.0 சர்ச்சார்ஜ். செலுத்தும் வரி ரூ 100/- ஆனால் அதிகப்படியான ரூ 50/-க்கு நாலணா வீதம் ரூ 12.8.0 சர்ச்சார்ஜ். ③ ஒருவர் செலுத்தும் நிலவரி ரூ 450/- என்று வைத்துக் கொள்வோம். ரூபாய் 50க்கு சர்ச்சார்ஜ் இல்லை. மறு ரூ 50/-க்கு ரூ 12.8.0 மீதியுள்ள ரூ 350/-க்கு 8 அணா வீதம் ரூ 175/- ஆக மொத்தம் சர்ச்சார்ஜ் ரூ 187.8.0. ரூ 500/- வரை இந்த மாதிரி. அதாவது ரூ 500/- நிலவரியானால் சர்ச்சார்ஜ் ரூ 12.8.0ம் ரூ 200:0.0ம் ஆக ரூ 212.8.0. ④ நிலவரி ரூ 500-க்கு மேல் இருந்தால் அதாவது ரூ 800/- ஆயிருந்தால் 500 ரூபாய் வரையுள்ள ரூ 212.8.0ம் அதற்கு அதிகமாக உள்ள ரூ 300/-க்கு அணா 12 வீதம் ரூ 225ம் ஆக ரூ 437.8.0. நிலவரி ரூ 1000 இருந்தால் முதல் ரூ 50க்கு இல்லை. அடுத்த ரூ 50/-க்கு ரூ 12.8.0, அடுத்த ரூ 400/-க்கு ரூ 200.0.0. அடுத்த ரூ 500க்கு ரூ 375.0.0 ஆக ரூபாய் 587.8.0. ⑤ நிலவரி ரூ 1000க்கு மேல் இருந்தால் உதாரணமாக ரூ 1050 நிலவரியானால் ரூபாய் ஆயிரத்துக்கு ரூ 587.8.0ம் ரூ 50க்கு ரூ 50ம் ஆக ரூ 637.8.0 சர்ச்சார்ஜ். ரூ 1500/- நிலவரியானால் ரூ 1087.8.0 சர்ச்சார்ஜ். **பஸ் கட்டணம்:** மைலுக்கு ஒரு தம்படி அதிகம். அரை மைல்களுக்கு இரண்டு மைலுக்கு ஒரு தம்படி. இரண்டாம் வகுப்பு டிக்கட் கட்டணத்தில் 12½ சதவீதம்.

நில வருமானமும் வரிப் பொறுப்பும்:

| நிலவரியும் சர்ச்சார்ஜும் | | | மொத்த வருமானமும் மொத்த வரிப்பொறுப்பும் | | | |
|---|---|---|---|---|---|---|
| நிலவரி ரூ | சர்ச்சார்ஜ் ரூ | சராசரி வீதம் ரூபாய்க்கு | ~~சர்ச்சார்ஜ்~~ அம்சமணியக் கணிப்பு மதிப்புபடி வருமானம் | சர்ச்சார்ஜ் உள்பட மொத்த வரி | வரிப்பளு சதவீதம் ரூபாய்க்கு | மிச்ச வருமானம் |
| ரூ 50 | ரூ .. | | 500 | 50.0.0 | 0.1.7¼ | 450.0.0 |
| ரூ 100 | ரூ 12.8.0 | 0.2.0 | 1000 | 112.8.0 | 0.1.9½ | 887.8.0 |
| ரூ 150 | ரூ 37.8.0 | 0.4.0 | 1500 | 187.8.0 | 0.2.0 | 1312.8.0 |
| ரூ 200 | ரூ 62.8.0 | 0.5.0 | 2000 | 262.8.0 | 0.2.1¼ | 1737.8.0 |
| ரூ 250 | ரூ 87.8.0 | 0.5.7¼ | 2500 | 337.8.0 | 0.2.2 | 2162.8.0 |
| ரூ 300 | ரூ 112.8.0 | 0.6.0 | 3000 | 412.8.0 | 0.2.2½ | 2587.8.0 |
| ரூ 400 | ரூ 162.8.0 | 0.6.6 | 4000 | 562.8.0 | 0.2.3 | 3437.8.0 |
| ரூ 500 | ரூ 212.8.0 | 0.6.10½ | 5000 | 712.8.0 | 0.2.3¼ | 4287.8.0 |
| ரூ 600 | ரூ 287.8.0 | 0.7.8 | 6000 | 887.8.0 | 0.2.4½ | 5112.8.0 |
| ரூ 700 | ரூ 362.8.0 | 0.8.3½ | 7000 | 1062.8.0 | 0.2.5 | 5937.8.0 |
| ரூ 800 | ரூ 437.8.0 | 0.8.9 | 8000 | 1237.8.0 | 0.2.5½ | 6762.8.0 |
| ரூ 900 | ரூ 512.8.0 | 0.9.1¼ | 9000 | 1412.8.0 | 0.2.6 | 7587.8.0 |
| ரூ 1000 | ரூ 587.8.0 | 0.9.5 | 10000 | 1587.8.0 | 0.2.6½ | 8412.8.0 |
| ரூ 1200 | ரூ 787.8.0 | 0.10.6 | 12000 | 1987.8.0 | 0.2.7¾ | 10012.8.0 |

மேலேயுள்ள புள்ளி விவர கட்டத்தின் விளக்கம்

① ஒருவன் கட்டும் நிலவரி ரூ 100 என்று வைத்துக் கொள்வோம். (அதை முதல் பத்தியில் தந்திருக்கிறோம்.) ② அவன் கட்டும் சர்ச்சார்ஜ் ரூ 12.8.0 (இது இரண்டாம் பத்தியில் தரப்படுகிறது) ③ அவன் செலுத்தும் ரூ 12.8.0 ஆனது அவனது நிலவரியான ரூ 100ல் ரூ 0.2.0 ஆகிறது. (இது 3-ம் பத்தியில் தரப்படுகிறது) ④ நிலத்தை குத்தகைக்கு அடைத்தால் இத்தனையாக எவ்வளவு கிடைக்கிறதோ அதை அந்த நிலத்தின் எல்லாச் செலவுகளும் போக மீதியுள்ள நிகர வருமானமாக மதிக்கலாம். இந்த நிகர வருமானமானது நிலவரியைப் போல் 10 மடங்கு இருக்கும் என்று "அம்சமணியம் கணிப்பு" மதிப்பாகிறது. அதாவது ஒருவன் ரூ 100 நிலவரி கட்டினால் அவனது நிலத்தின் நிகர வருமானம் ரூ 1000 என்று மதிப்பிடப்படுகிறது. (இது 4-ம் பத்தியில் தரப்படுகிறது) ⑤ முதல் பத்தியில் குறிப்பிட்ட நிலவரியும் 2-வது பத்தியில் குறிப்பிட்ட சர்ச்சார்ஜும் சேர்ந்து அவன் சர்க்காருக்குச் செலுத்தும் மொத்தத் தொகை ரூ 112.8.0 (இது 5-ம் பத்தியில் தரப்படுகிறது. ⑥ அவன் மொத்தமாகக் கொடுக்கும் ரூ 112.8.0 ஆனது அவனுடைய வருமானமாகிய ரூ 1000-ல் ரூபாய்க்கு 0.1.9½ ஆகிறது என்பது 6ம் பத்தியில் தரப்படுகிறது. ⑦ அவனது வருமானமாகிய ரூ 1000ல் செலுத்திய நிலவரியும் சர்ச்சார்ஜும் போக மிச்சமாக உள்ள ரூ 887.8.0 என்பதை 7ம் பத்தியில் தந்திருக்கிறது. நிலவரியும், சர்ச்சார்ஜும் யாரை எவ்வளவு தூரம் பாதிக்கிறது என்பதை இதனால் தெரிந்து கொள்ளலாம்.